கொம்பிட் டுமியவும். வாழை வடக்குப்போன வேரண்டை யில் எட்டுநாள் சிறுநீர் விட்டு எட்டாநாள் செவ்வாய்க்கிழ மையில் பெலியிட்டுப் பிடுங்கி யிறுக்கும் பற்கொம்பிட் டுமிய வும். வெண்காரம் கிளுவைப் பாலிற் குழைத்து வெத்திலையிற் றடவி மூன்று சுருள் குடுக்கவும். வெண்காரமு மரசம் பாலு மிப்படி குடுக்கவும். வெள்ளையவரைச் சாறும் ரசமும் உள் ளங்கையிற் றடவிப் பிடிக்கவும். வெள்ளைக்குன்றி வேரும் அரிதாரமும் புளூவெச்சமும் பசுவின் பாலிலரைத்து...... ழியிற் பூச நடக்கும். உலக்கையிற் பூச உருளும். அம்மியிற் பூச நடக்கும். கையிற் றடவிப் புளியிலை யுருவக் குளவி யாம்.

End

பச்சைப் பாம்பின் வால் ஆமணக்கில் வேருவி......டை திரியாகத் திரித்து நல்லெண்ணெயில் விளக்கேத்தி தலை ஓட்டிலே மை பத்தவைத்துக் கண்ணிலிட புதையல் தோனும்.

---

## 1086. No. 688 (a) பலவகை மருந்துகள்.

**ஏடுகள் 113 ; அதிக சிதிலம் Lines 5—6 in a Page.**

இதில் பலவகை நோய்க்கும் விஷங்களுக்கும் மருந் தும், சாலமுறைகளும், கற்பங்களும், மந்திரங்களும் எழு தப்பட்டுள்ளன.

Beginning :

தேவதாளி சமூலமும் கொண்டுவந்து குறும்பனைக் கிழங்கும் கொண்டுவந்து உலர்த்திப்பொடி செய்து வஸ்திர காயம் பண்ணி புதுக்கலசத்தில் வைத்துக்கொண்டு தின மொரு வெருகடிப் பிரமாணம் பசுவின் நெய்யிற் குழைத்து

பிழுங்க ஆறுமாத்தையில் வச்சிரகாயமாம். புளிப்பு போ கம் தவிரவும்

*  *  *  *

ஒரு தலைவலிக்கு பொன்னாங் கண்ணி சம்மூலமும் கொண்டுவந்து இரண்டு வெண்காயமும் நருக்கி நாசியிலே குத்த நிற்கும். நல்ல வேளை இலைச்சாறு திருநீற்றில் கலந்து நாசியில் குத்த நிற்கும்.

செவிப்புழு விழமருந்து நிலக்கடம்பு சாற்றில் சுக்கு தேய்த்து செவியில் குத்தி சிறுபொழுது கழித்துத் தலை யைச் சாய்க்கச் செவிப்புழு விழும். கஞ்சாங்கோரைச் சாறும் முலைப்பாலும் கலந்து செவியில் குத்த புழுவிழும்.

*  *  *  *  *  *

சாரணைவேரும் தினை அரிசியும் எருமைப்பாலால் அ ரைத்து அடைசுட்டுத் தின்ன ஈளையும் இருமலும் தீரும்.

*  *  *  *

உப்பிலிவேரும் குதிரைவாலிவேரும் குளிசமாடி குட த்தில் வாயில் வைத்துக் கீழும் வைத்துத் தேங்காயை அதின்பேரில் வைத்து [உடைக்க] தேங்காய் தகரும் குட முடையாது.

End:

பொன் அரிதாரம் வேணுமென்றபடி கொண்டுவந்து சிறுகற்றூளை ..............................மந்திச்சு வெயிலிலே வைத்து எடுத்துக் காசுபோல தட்டி.............................. ...................சாம்பலை ஒரு உலை மூடியிலே இட்டு கடுக் கொண்டு தட்டின.....................சாம்பலை ஒரு உலை மூடி கொண்டு மூடி சீலைமண் செய்து புடம்........................ பற்பமாம்.

குறிப்பு:

இதில் மருந்துகளை அல்லாமல் இராமாயணம் எழுதிய சில ஏடுகளும் அகஸ்தியர் குருநாடியில் சில செய்யுட்களும் திவாகர தோத்திரமும் இருக்கின்றன.

## 1087 (b) உதைய திவாகர தோத்திரம்.

Lines 5 in a Page.

இது சூரியனைப் பற்றிய தோத்திரம். இயற்றியவர் பெயர் தெரியவில்லை. அச்சிடப்படவில்லை.

**Beginning:**

கடல்தனில் நீயெழுவாய் காரணகாரணனே
புடைபட நின்னடியார் போத உனைத் தொழுவேன்
அடையவுமொரு தேர்மேலசைய எழுந்தருளும்
உடையவனுயிரே உதய திவாகரனே. 1

காலையில் மேல்வருவாய் கதிர்பலவுமுடையாய்
வேலையின் மேல்வருவாய் வேதிய வேதியனே
சாலவுனைத் தொழுவேன் என் சங்கை யறுத்தருளும்
ஓலமெனுந் துணையே உதைய திவாகரனே. 2

கிளர்கதி ராயிரமுங் கெழுமி எழுந்தருளும்
வளரின ஒளிமுகவா வானவர் நாயகமே
உளமுற வுட்புகுவாய் உதைய திவாகரனே. 3

**End:**

பத்தியினாலடியேன் பாடிய பதினொலும்
நித்த நினைந்துருகி நெஞ்சினில் வைப்பவர்தம்
வைப்பு மிருப்பு மவர் வானுலகுந்தருமே

உதித்து வெளிகாட்டி யொடுங்கி யிருள்காட்டி
அதித்து மழைகாட்டு மய்யா—மதித்த
அடரோ என் கண்ணலால் சரோஜ? அன்ப
ரிடரோ களைவாயு நீ.

சாதித்து மூவுலகுந் தானாகி யேவிளங்கும்
ஆதித்த னேகமலை அண்ணாமலை—பேதித்த
நாளாகி நாழிகையாய் நாயேன் தலையிலிருந்
தாளாகி வைத்தியே தா[illegible]